உகச. பாதகரிலோர் தன்வல
பக்கத்திடத்தொருத
ஞதவனை நடுவு
மாகக் குருசறைந்தார்.

உகரு. மிக்க பராபரன்றன
மேலான தேவசுத
னக்கிரமக்காரருக்குள்
ளாகவெண்ணப்பட்டு நின்றார்.

உகசு அந்தன் குருசி
லறையுண்டிருக்கையிலுஞ்
சித்தமுடனேழு
திருவசனஞ் செப்பலுற்றார்

உகஎ. யெகுதசோன் யூத
ரேந்தலெனை வேந்தெழுதித்
தேசுலவுகத்தர்
சிலுவை நுனியில் வைத்தான்,

உகஅ. சிலுவைமரத்தேற்றினபின்
சேவகர் சேர்ந்தண்ணல்
கலையை யெடுத்துக்
கதிக்க நாற்பங்கு செய்தார்

உகக. ஐயன்றெரிசி
யறைந்தபடி யாண்டகை தன்
றையலில்லாச் சட்டையின்மேற்
றாயமது போட்டார்கள்.

உஉ0. அவ்வழியிற் செல்வோரு
மாசாரிமார் தலைவர்
தெய்வனிடக் கள்ளனுந் துற்
சேவகருந் தூஷணித்தார்.

உஉக. அங்கவர் கடங்கடலை
யாட்டிச்சியுன்னை ரட்சித்
திங்கிறங்கென்றேசி
யிகழ்ச்சிபல செய்தார்கள்.

உஉஉ. என்னவிவன் மற்றோரை
யிரட்சித்தானிப்போது
தன்னையிரட்சித்தால் யூதர்
தங்களரசாகுமென்றார்.

உஉங. தேவன் மகனாகிற்
சிலுவையினின்றிறங்கு
மேவியுனை நம்பி விசு
வாசிப்போமென்று சொன்னார்.

உஉச. இவ்வாறெலாரு மிகழ்ந்
தீனமுறப்பேசி
யொவ்வாதனேக
முதாசனப் பாட்டோதலுற்றார்.

உஉரு. சிலுவை மரத்தடியிற்
றேவமாதாவு
மலைவா யோவானு
மனுமகனைப் பார்த்து நின்றார்.

உஉசா. ஆறுமுதலொன்பதள
வாகவந்த காரமுண்டாய்
வேறுபடச் சூரியனு
மிக்க விருளானதுவே.

உஉஎ. ஆகம் நிறைவேறி
யனைத்து முடிந்ததினாற்
றாகமுண்டென்றேசுபரன்
சாற்றினாரப்போது.

உஉஅ. ஓடியொருத
னுவர்க் கடலிற் பாசிபற்றிக்
காடி துவைத்தாம்பற்
ஈளோதனிற் கோர்த்துக் கொடுத்தான்.

உஉகூ. காடியை யுட்கொண்டதற்பின்
கர்த்தர் தலைசாய்த்துத்
தேடுமுயிர்க்காய்த் தமது
சீவனையும் விட்டுவிட்டார்.

உ௩0. அந்தாதியே நின்
னருட்கரத் தென்னாற்றுமத்தைத்
தந்தேனென் றோதித்
தலைசாய்த்துச் சீவன் விட்டார்.

உ௩க. அத்தருணந் தேவால
யத்திரைமேலே துவக்கிச்
சத்தமுறக் கிழிந்து
தாரணியெலாமதிர்ந்து.

உ௩உ. கல்லறைகளுந் திறந்து
கன்மலைகளும் பிளந்து
வல்லபரிசுத்த
வான்களெழுந்தார்கள்.

உ௩௩. சேர்வைத் தலைவனிந்தச்
செய்கையெல்லாங் கண்டவுடன்
பார்வைக்கிவரோ
பரமசுதனாகுமென்றான்.

உ௩ச. வேடிக்கை பார்ப்பதற்காய
வேண்டிவந்த கும்பலைத்துங்
கூடிநின்று மார்படித்துக்
கொண்டுதிரும்பினார்கள்.

உருரு. ஆரியன் மேனேசமுற்ற
வாடவருமாதர்களுந்
தூரநின்று நோக்கித்
துயரமிகப் பூண்டார்.

உருசு கள்ளரிருவர்
கணைககாலெலும் பொடித்தார்
வள்ளல் முதவே
மரித்ததினுல் விட்டுவிட்டார்.

உருஎ. ஈட்டியினுலோர்த
ஸிறைவிலாவைத் துளைக்கக்
கூட்டிய நீருங்
குருதியும் பொங்கினதே.

உருஅ. அறிமத்தியா வூரா
ஞனயோசேப்புத்
திறமைப் பிலாத்திடத்திற்
சென்றுத்தரவெடுத்து.

உருகூ. முந்திரவில் வந்த
மூனிநீக்கோதேமுடனே
கந்தவர்க்கத்தோடு
கலையதுவுங் கொண்டுவந்து.

உச0. ஐயன் சடத்தை
யதீகதுயராவிறக்கித்
துய்யபரிமளத்தாற்
சூடியலங்கரித்து.

உசக. சீமோன் யோசேப்பு வெட்டிச்
செய்த புதுக்கல்லறையிற்
கோமான் சடத்தைக்
கொணர்ந்தடக்கஞ் செய்தார்கள்.

உசஉ. புல்லர் பிலாத்திடத்திற்
போய்விடைகொண்டே திரும்பிக்
கல்லறையில் முத்திரையுங்
காவலதும் வைத்தார்கள்.

உசஙா. இத்தனையாய்ப் பாவிகட்கா
யேசுபட்ட பாடனைத்துஞ
சித்தமுருகித்
தியானிக்கச் செய்வேனே.

## கச. மனவிசாரம்

உசச. அன்புள்ள சுவாமியெனக்
காகவிங்கேநீர் மிகவுந்
துன்பமுறப்பூண்டு
துயர்படவு யானீரோ.

உசரு. எந்தையே பாவமதா
லெங்களுக்குண்டாகிய நிற்
பந்தமனைத்துஞ் சுமந்து
பாடுபடலானீரோ.

உசசா. வஞ்சகனுன்செய்த வெல்லா
மாறுபாட்டுக்காகத்
தஞ்சமற்றிங்கையா நீர்
தாழ்த்தி பண்ணப்பட்டீரோ.

உசஎ. கொடுமையெலாஞ் செய்த
கொலைபாதகர்க்கா
யடிமையைப்போலிங்கே யென்
ஞண்டவனே நின்றீரோ.

உசஅ. உன்னதத்திலே யுயர்ந்த
வொப்பதற்ற மாவேந்த
ரின்னவிதக்கோல
மெடுக்க மனதானீரோ.

உசகூ. நீசந்தனனென்னது
நிந்தையனைத்துஞ் சுமந்து
மாசற்ற சோதி
மகாதயவாய் நின்றீரோ.

உ௫0. சற்றெனினும் பாவமில்லாத்
தம்பிரா னேயபுத்திரன்
குற்றமிகச் செய்தவர்போற்
கோட்டிகொள்ளப்பட்டாரோ.

உ௫க. கடன்பட்ட பாவி
கடனையெல்லாந் தீர்க்கக்
கடன்படாக் கத்தன்
கடன்றீர்க்கலானீரோ.

உ௫உ. என்னசெய்தீரையா நீ
ரித்தீங்குமக்கு வர
வன்னதெல்லாம் பாவி
யடியேன்செய் பாதகமோ.

உ௫ங. கறைப்பட்ட பாவக்
கடியினடியாரைச்
சிறைப்பட்டு மீட்கத்
திருவுளமானீரோ.

உ௫ச. கட்டுண்டெந்நாளுங்
கடுஞ்சிறைக்குள்ளே கிடந்து
வெட்டுண்க மாநதர்
மிகநேரஸ்தோராமே.

உ௫௫. சின்னத்தனமாயான்
செய்ததுடுக்கா லெனைத்தான்
கன்னத்தடிப்பதற்குங்
கள்ளனைப்போற் கட்டுதற்கும்.

உருசு. நிந்தைப் படுத்துதற்கும்
நெஷ்டூரஞ் செய்வதற்குங்
கொந்தளிக்கவென்னைக்
கொடுஞ்சிறைக்குள் வைப்பதற்கும்.

உருஎ. எண்ணூழிகாலத்
தெரிநாகப் பேய்களென்னைப்
பண்ணாத கோட்டியெல்லாம்
பண்ணுதற்கும் ஞாயமலோ.

உருஅ. ஆனாலும் பாவியிந்த
வாக்கினைக்குள்ளாகாமற்
றூனே நீரிவ்விதமாய்த்
தாழ்த்தி பண்ணப்பட்டீரோ.

உருகூ. என்முகத்திற்றுப்பி யென்னை
யீங்கிதை செய்யாப்படிக்கு
நின்முகத்திற்றுப்ப வென்ன
நீதியதுண்டையாவே.

உசுO. பொல்லாத வஞ்சப்
புலையனான்செய்த வினைக்
கெல்லாருமென் முகத்தி
லேயுமியவே ஞாயம்.

உசுக. வெட்கமற்றுப் பாவமதில்
வீழ்ந்திலட்சை கெட்டலைந்த
வக்கிரமக்கார
னகந்தைக்கீ துத்தரிப்போ.

உசுஉ. நற்பணிவில்லா
நடக்கையைக் கண்டாரேனு
மற்பன் முகத்துமிந்தா
லாங்காரமாவேனே.

உகூங. சிறியே வஞ்சரெல்லாஞ்
சேர்ந்துன்றிரு முகத்திற்
காறியுமிந்தங்
கனபொறுமையானீரோ.

உகூச. பாவமொன்றுஞ் செயயாப்
பரிசுத்த வஸ்துனது
தேவதிருமுகத்திற்
செய்யும் நிந்தை கொஞ்சமதோ.

உகூரு. பெத்தரிக்கத்தால் விழுந்த
பேதுருவைத் தள்ளாமற்
சித்தமிரங்கித்
திருவிழியாற் பார்த்தீரே.

உகூசு. அவ்வாறிந்நாள்வரைக்கு
மாகாத பாவிகளை
யெவ்வேளையுங் கண்
டிரங்க மனதானீரோ

உகூஎ. நிற்பந்தமாய் மடிய
நின்றனக்குத் தீர்ப்பான
தற்பனுயிர்வாழ்ந்
தழியாதிருப்பதற்கோ.

உகூஅ. நித்திய சாவுக்கிடமாய்
நீசனுன் போகாம
லுத்தமனீர் சாக
வுவந்து சித்தமானீரோ.

உகூகூ. பயித்தியகாரனெனப்
பண்ணிவைத்த கோலஞ்
சயித்திருக்கவென்றுற்
றயவதுமக்குண்டாச்சோ.

உஎ௦. வலிய கொலையாதகன்றன்
வஞ்சவுயிர் தப்பச்
சிலுவையின் மீதேறத
திருவுளமானீரோ.

உஎக. சதைதெறிக்கச் செந்நீர்
சரீரமெல்லா மோட
விதனமுறவையா
மிகவடிக்கப்பட்டீரோ.

உஎஉ. சிக்கதற்று வெட்கமற்றுச்
சீலையதற் றம்மணத்தோ
டக்கிரமக்காரர் செய்த
வாகாத்தியத்தாலே.

உஎ௩. எந்தை தமதுடையெ
லாமுரியப்பட்டதினல்
வந்தவவமானத்தால்
வாடிநிற்கலானீரோ.

உஎ௪. தீயபிசாசெம்மைச்
சினந்தடிக்கச் செய்யாம
லாயனிங்கே யாடுகளுக்
காயடிக்கப்பட்டாரோ.

உஎ௫. எள்ளத்தனை முள்
ளெனுங்கழலிற் றைத்தவுடன்
கள்ளததனன் மிகுந்த
கஸ்திப்படுவேனே.

உஎ௬. மிஞ்சின முட்கூடுருவ
மெய்ச்சிரமெலாந் துளைத்த
சஞ்சலத்தாலையா
தவித்து நிற்கலானீரோ.

உஎஎ. சிங்காரித்தீனர்
சிரத்தைமினுக்கினதற்
கெங்கோனறலேக்கித்
தனேவாதை வந்ததுவோ.

உஎஅ. வாயினுற் றாஷணமும்
வம்புமே சொல்லிவரும்
பேயனுக்கல்லோ கசப்பும்
பிச்சுமுமக்காகாதே.

உஎகூ. பூணுகின்ற பாவப
புலேயனிருகால் கரத்தி
லாணி கடாவத்தகும
லாதுமக்கீதாவானேன்.

உஅO, நாட்டமற்ற பாவியென்ற
னஞ்சகமா நெஞ்சகத்தி
லீட்டியினுற் குத்தா
திறைநீர் குத்துண்டீரோ.

உஅக. என்னே யுயர்த்தி
யிறைவான் மேலாக வைக்க
நின்னேமிகத் தாழ்த்தி
நீசனேப்போணின்றீரோ.

## கரு. மனஸ்தாபம்.

உஅஉ. ஐயாவெனேப் படைத்த
ஆதிபரப்பொருளே
துய்யாவுமையித்
துயரமெல்லாஞ் செய்தவரார்

உஅ௩. பாதகமெல்லாம் புரிந்த
பாவியடியேனிருக்கக்
கோதில்லானே நீர்
கொடுங்கொலேக்குளாவானேன்.

௨௮௪. வெஞ்சினப் பேயக்காளாய்
மெலிந்து சிறைப்பட்டிருந்த
வஞ்சகனை மீட்பதற்காய்
வந்தடிமையாவானேன்.

௨௮௫. பாவத்தின் கட்டறுத்துப்
பாதகனை மீட்டுவிட்டச்
சீவப்பிரபு
திடுக்குறக் கட்டுண்பானேன்.

௨௮௬. வானோரறிய வெகு
மானமெல்லாம் நானடைய
ஆனனுமிந்தவவ
மானமுமக்காவானேன்.

௨௮௭. பாரமிகுங் கொடிய
பாவச்சுமை யிறக்கக்
கோரமெல்லாம் பட்டுக்
குருசைச் சுமப்பானேன்.

௨௮௮. செய்கின்ற பாவச்
சிறியேனுயிர் வாழ்க
வையகத்தினீர்தான்
மரித்தடக்கமாவானேன்.

௨௮௯. மத்தியஸ்தமா யெனக்காய்
வந்த திறலிவ்விதமாய்க்
கஸ்தியெல்லாம் பட்டுக்
கடாட்சித்துக்கொண்டீரோ.

௨௯௦. பிணையாளியாகப்
பிணைப்பட்டெனக்கே
துணையாக நின்று
துயரமெல்லாம் பட்டீரோ.

உகூக, அச்சமில்லாப் பாவி
யடியேனுக்காய் வேண்டிப்
பட்சமுடனையா
பரிந்து நிற்கலானீரோ.

உகூஉ என்றாலும் பாதகனை
யீடேற்றவையா நீர்
நன்றாகச் சமமதித்து
நாட்டமனதானீரோ.

உகூங, ஆச்சரியஞ் சாவதற்கென்
றுண்டவர் வாரார் மேய்ப்பர்
தாட்சியுடன் மந்தைகட்காய்த்
தஞ்சீவனைத் தாரார்.

உகூச. குற்றமிகச் செய்த
கொடியோனைத் தப்பவைக்கக்
குற்றமற்ற மீட்பர்
கொலைக்களத்துக்குப் போறா.

உகூரு. சன்மார்க்கராக்கினைக்குள்
ளாய் விழுந்துதான் மரித்தார்.
துன்மார்கனுக்குச்
சுகமுமுண்டு சீவனுண்டு.

உசுசா. உள்ளங்காலைத் துவக்கி
யுச்சிமட்டும் பொல்லாப்பாற்
கொள்ள நிறைந்த
கொடும் பாவியானடியேன்.

உகூஎ. நன்மையற்று வீணாக
நானிலத்திலே யிருக்குந்
துன்மையுற்ற சண்டாளன்
றுன்பமுறவே ஞாயம்.

உகூஅ. இவ்விதமாம் வாதையை நீ
ரேற்றவுமதுத் தரிப்ப
தெவ்விதமுன் பட்ச
மிரக்கமன்பு மட்டுளதோ

உகூகூ. நானோ வுலகத்தோ
டேவாழ்ந்து நாள்விடுத்தே
னேனோவுமை முழுது
மிவ்வித நிற்பந்தமுறும்.

௩00. இத்துதியைப பாட
வெவனுலாம் நன்றிகெட்ட
சத்துருக்களென்ன
சரியுபகாரம் புரிவார்.

௩0க. நீதற்றுனக்குச்
செலுத்தத் தகுமான
தேதென்றெவாக்கு
மிருதயத்திற்றோன்றுதே.

௩0உ. ஆண்டவனே நின்றயவை
யன்பை யோசித்தடியேன்
மீண்டுமெதற் கொப்பிடவு
மேதினியிலே யறியேன்.

௩0௩. பின்னெப்படித்தான்
பிரதிநலமளிப்பே
னென்னபதிற் சொல்வே
னிறைஞ்சியிங்கே வெட்கி நிற்பேன்.

## கக. யூதர்களின் நன்றிகேடு.

௩0ச. அலையாதென்றற்றுமமே
யப்பாலுஞ் சென்று
கொலைகார யூதர்
கொடுமையைச் சிந்திப்பாயே.

௩௱௫. ஆதத்தைச் செய்தவனுக்
காயொரு பெண்ணைக் கொடுத்துப்
போதத்தயை செய்
புராதனனைக் கொன்றாரோ.

௩௱௬. எட்டுப்பேருஞ் சலத்தி
லேயழியாமற் காத்து
விட்டதற்கோ புத்திரர்கள்
வேதனைசெய்யத் துணிந்தார்.

௩௱௭. கல்தேயர் தேசத்தாரைக்
காணுடாள வைத்த
வல்லமையை யூதர்
மறந்துதான் போனாரோ.

௩௱௮. ஆனசாராளை
யபிமெலேக்குப் பார்வோனு
மாளாமழிக்காதகற்றும்
வண்மை மறந்திட்டாரோ

௩௱௯. உள்ளபடி யூதர் தந்தைக்
குற்றமலடகற்றிப்
பிள்ளைவரந் தந்த
பெருமானென்றெண்ணலேயோ.

௩௱௰. ஆபிரகாமன்றுமல
டாய்பிறந்தால் யூதாகுலந்
தீவிரமாய்க் கொலைவுனைச்
சேர்ந்துவர மாட்டாரே.

௩௱௰௧. தொண்ணூற்றோராண்டு
தொலைந்த மலடிமக்கள்
பண்ணாத கீர்த்தியெல்லாம்
பண்ணமனம் வைத்தாரோ.

௩௧௨. எலியேசரீசாக்குக்
கென்று பெண்ணைத்தேட
வலியவெதிராக
வரச்செய்த மாதவனே.

௩௧௩. இலாபானின் மக்களை
யியாக்கோபுக்கீய்ந்து
வலாபேரெடுக்க வைத்த
மன்னவனென்றெண்ணலையோ.

௩௧௪. பஞ்சத்தினால் மெலிந்த
பன்னிரு பிதாக்களுக்கும்
நெஞ்சத்தோடவளித்த
நேயனுக்கோ தீமைசெய்தார்.

௩௧௫. ஏழாண்டு பஞ்சத
தெகிப்பத்தில் யோசேப்பைத்
தாழாமலாதரித்த
தன்மமதன்மமாச்சோ.

௩௧௬. நேராய்ச் சிறைமீட்
டிரட்சிக்காதே போனாற்
பாரோனடிமைகளிப்
பாதகங்கள் பண்ணாரே.

௩௧௭. ஆற்றிலெறியுண்டமிழ்ந்தி
யாவிபோம் பாலகரை
யேற்றதற்கோ இவ்வா
றெபிரேயர் செய்தார்கள்.

௩௧௮. பத்துவித வாதையினாற்
பாழெகித்தைத் தாழ்த்தியிந்தச்
சத்துருக்கள் சொந்தச்
சனமென்றே யெண்ணினையோ.

௩௧௯. நானூறு சங்கம்
நவிந்த சிறைமீட்டதைத் தா
னாலும் பூதர்மறந்
தாகடியஞ் செய்தாரோ.

௩௨௦. கிடைமறித்து மேய்க்குங்
இழயக்கோ தந்த
இடையர் குலத்தினுக்கிங்
கென்ன புத்தியுண்டாகும்.

௩௨௧. நன்மனதாய் மன்னவை
நாற்பதாண்டடந்ததலாற்
கன்மலையிற்றண்ணீர்
கனிந்தளித்த காரணனே.

௩௨௨. அக்கினித் தூண்மாலையினு
மம்புதத் தூணைப்பகலு
மொக்கவளித்தாதரித்த
வுத்தமர்க்கோ நிந்தைசெய்தார்.

௩௨௩. கோட்டுமிருகங்கள் பல
கொள்ளிவாய்ச் சர்ப்பமுற்ற
காட்டிலமுதளித்த
காரணனையோ பகைத்தார்.

௩௨௪. சேதமற நாற்பதிலுஞ்
சீனவனாந்திரத்திற்
பாதரட்சை யாடை
பழசாகக் கண்டாரோ.

௩௨௫. அத்தனை யற்புதங்கண்
டன்றே வனாந்தரத்தி

யிகழ்ந்தாரொன்றெண்ணலையோ.

௩௨௬. அன்று வனாந்தரத்தி
லாகடிய பூதர்களைக்
கொன்ற பழிக்கின றனையுங்
கொல்லத் துணிந்தாரோ.

௩௨௭. ஆதங்கொடுத்த வந்த
காரவிருளகற்ற
வேதங்கொடுத்த மதி
வித்தகனையோ வெகுண்டார்.

௩௨௮. வானத்திடி முழங்க
மாமலைமேலக்கினியின்
ஞானத்திடையினின்று
சத்தியமறை தந்தவனோ.

௩௨௯. விற்பனமோடே சீனா
வெற்பதின் மேலேயிருந்து
கற்பனைபத்துங் கொடுத்த
காரணனின் கண்மணியோ.

௩௩௦. கொண்டல் வளைந்தெக்காளங்
கூறக்கொடு முடியிற்
கண்டவரெலா நடுங்கக்
காட்சியளித்தவனோ.

௩௩௧. சாபமெல்லாமாசீர்வா
தங்களாய் மாற்றிவிட்டுக்
கோபமுறப் பீலேயாங்
கொண்டபகை தீர்த்தவனோ.

௩௩௨. மாட்சிமையாய்ப் பத்து
மறைப்பெட்டிமேலிருந்தக்
காச்சரியமாயோர்தா
ஞற்றைப் பிரித்தவனோ.

## பேரின்பக் காதல்.

௩௩௩. அத்தமிக்கச் சூரியன்போ
காமலிழுத்தே நடுவா
னத்தில் வைத்து யூதர்கட்கு
நல்லவெற்றி தந்தவனே.

௩௩௪. சந்ததியெலாம் விளங்கத்
தாவீதின வங்கிஷத்தைச்
சிந்தையினுற்றெரிந்த
செய்கையெல்லாம் வீணாச்சோ.

௩௩௫. எத்தனையோ யாரா
லியம்பலாம் யூதர்தமக்
கத்தனையாய் நன்மைசெய்த
வாண்டகை யைக்கொன்றாரோ.

௩௩௬. சீயோன் குமாரிதனைச்
சேர்ந்து மணஞ்செய்யவந்த
ஆயோனையிந்த
அலங்கோலஞ்செய்தாரோ.

௩௩௭. செத்தவரையெழுபபச
செய்தவுமைக் கொலவதற்கோ
சத்துருக்களெண்ணிச்
சதிமானஞ் செய்தார்கள்.

௩௩௮. எவ்வுயிருங் காக்கு
மிரட்சகனைக் கொல்வதுவே
செவ்வையென்றே யூதர்சனந்
தீர்மானஞ் செய்தார்கள்.

௩௩௯. சொந்தமெனத் தங்கள்குலத்
தோன்றலென வந்தவருக்
கிந்தவித நன்மைசெய்ய
வெண்ணினதோ யூதர்சனம்.

## ௧௭. ஆற்றமைப் பெண்ணொப்பாரி.

௩௪௦. நன்றியிதெல்லா மறந்து
நாயகனை நாணமன்றிக்
கொன்ற துரோகக்
கொலைகாரியானேனே.

௩௪௧. போதத்தயை புரிந்த
புண்ணியனுக்கேறாத
பாதகத்தைச் செய்த
பழிகாரியானேனே

௩௪௨. தன்னுயிரை விட்டென்
றனதுயிரை யாதரித்த
மன்னுயிருக்கன்பை
வதைசெய்து போட்டேனே.

௩௪௩. எந்தனிரு கண்மணியை
யென்பிராண நாயகனை
நிந்தனைசெய்த மகா
நெஷ்டூரியானேனே.

௩௪௪. என்னை வலியத்தேடி
யென்பாலிருக்க வந்த
மன்னவனைக் கொன்றமுழு
வஞ்சகி நானேனே

௩௪௫. சத்துருவானாலு மெனைத்
தற்காத்த நாயகன்மேற்
பத்தியில்லாப் பஞ்சமா
பாதகத்தியானேனே.

௩௪௬. வன்மப் பசாசை
மடக்கியெனை வாழ்கவைத்த
தன்மத்துரையைச்
சதிசெய்து கொன்றேனே.

௩௪௭. பற்றுதலே யில்லாமற்
பத்தாவைக் கொன்றுவிட்டுச்
சற்றுமுருகாத
சண்டாளியானேனே.

## ௧௮. வியாகுலம்.

௩௪௮. என்னுற்றுமாவே
யிரட்சகரிங்கே கொலையா
யுன்னால் மடிந்த
வுபகாரந் தோன்றுயோ.

௩௪௯. தேவாதி தேவனிங்கே
சீவன்விட்டு மாண்டதைத் தான்
பாவாசையா லுழன்ற
பாதகிநீ பாராயோ.

௩௫௦. சீவனுனக்காய் மடிந்து
செத்திருக்கப் பொல்லாத
பாவியுனக்குப்
பயமவராதேபோமோ.

௩௫௧. சாகாத வஸ்துனக்காய்ச்
சாவானுரென்றாலு
மாகாத பாவியுன
தாசையின்னஞ் சாகாதோ.

௩௫௨. அசையாயோ பாவி
யனைத்து மசையச்சே
யிசையாயோ முன்போ
லினியுமிருப்பாயோ.

௩௫௩. கற்குன்றெலாம் பிளக்கக்
கண்டாயே யென்றாலுங்
கற்குண நெஞ்சன்னைவிட்டுத்
துன்னிப் பிளவாதோ.

௨௫௪. உன்னத வஸ்திங்கே
யுனக்காய் மடிந்திருக்கப்
பின்னையுமுன்னெஞ்சம்
பிளந்துருகமாட்டாதோ.

௨௫௫. இச்சைகளுக்கெல்லாந் தா
னின்னமின்னுஞ் சாகாம
லச்சமற்றுநீ நடந்தா
லாககினைக்குள்ளாவாயே.

௨௫௬. யேசுவின் சாவாலினமுன்
னிச்சைகட்குச் சாகாம
லாசைகளுக்கே பிழைத்தா
லாரிருளில் வீழ்வாயே.

## ௧௯. மனஸ்தாப முக்கியம்.

௨௫௭. என்னுயிருக்கன்பே
யிராசாவே யும்மை முற்றுஞ்
சன்னை செய்து யூதர்
தமக்களிக்கச் செய்தேனே.

௨௫௮. சின்னப்படுத்தித்
திருமுகததிலே யுமிந்து
வின்னமுறப்பேசி
மிகத்தூஷணித்தேனே.

௨௫௯. முள்ளின்முடி சூட்டினனே
மூர்க்கத்தறைந்தேனே
வெள்ளமெனக் குருதி
மேவவதைத்தேனே.

௨௬௦. ஆளிற்பயித்தியனென்
ருக்கியடாமையினாற்
ரோளிற் சிலுவை
சுமத்திவைக்கச் செய்தேனே.

௩௯௧. கோல்கொடுத்தி ராசனெனக்
கோட்டியெல்லாங் கொண்டேனே
கால்கரத்திலாணி
கடாவியறைந்தேனே.

௩௯௨ ஈதெல்லாம் பாவி
யிடும்பினாலே விளைந்த
தீதெல்லா மிக்கொடுமை
செய்யவே தானதுவே.

௩௯௩. ஐயோவென் பாவத்
தகோரமுமை யிவ்விதமாய்ச்
செய்யாவதைகளெல்லாஞ்
செய்தடிக்கச் செய்ததுவே.

௩௯௪. நீஙகாமற பாவ
நிலையிலே நிற்பதுதான்
பாங்கோவதும்மைப்
பரிகாசஞ் செய்வதல்லோ.

௩௯௫. ஆகாத பாவியென்ற
னாங்காரத்தாற் புரியு
மாகாமையும்மை
யடிக்கிறதற்கொப்பாமே.

௩௯௬ வாயினானின்னை
வசனித்தும் பத்தியில்லா
மாயமெல்லா நின்னை
வதைக்கிறதற்கே சரியே

௩௯௭. அப்படியானாலு
னுக்கிரகஞ் செய்யுமென
வப்படியான் சொல்வே
னனக்குரைக்க வாயதுண்டோ.

௩௬௮. செய்யுமுமதன்பை யெல்லாஞ்
சிந்தியாதே போனால்
வையகத்திலென்போல்
மகா பாதகனாரோ.

௩௬௯. சித்தமிரங்கி யென்பாற்
செய்த நன்றெலாமறந்து
நித்தியமுந் தீமைசெய்தா
னின்றனக்காளாவேனோ.

௩௭௦. அருந்துயரீதெல்லா
மறிந்துமிளகா
இரும்பாய் மனதிருந்தா
லீடேறப்போறேனோ.

௩௭௧. கண்டார் நகைக்கக்
கழுக்குருசினீரிருக்கச்
சண்டாளனுக்குலக
சந்தோடம் வேண்டுவதோ.

௩௭௨. பரதாபத்தோடே நீர்
பாரக்குருசு
மரமீதிருக்கையிலும்
வஞ்சகனெஞ்சஞ் சாதோ.

௩௭௩. சீவன்விட்டு நீரிறந்த
செய்கையைச் சற்றே நினைந்தாற்
பாவியுயர் வாழ்ந்திருக்கப்
பாருலகில் ஞாயமுண்டோ.

௩௭௪. மிக்க பரமசுதன்
மேனியெல்லாங் காயமுற்ற
தக்கிரமக்கார
னறியாமற் போனேனே.

௩௭௫. ஈசனிதையம் பிளந்
திரத்தவெள்ளக்காட்சி கண்டு
மாசுபற்றிக் கெட்டலைந்து
மாபவத்தைச் செய்வேனோ.

௩௭௬. ஆகாத பாவியகத்
தச்சாயிப்பாடுறைந்தால்
மோகாசை யாவு
முழுதுங் கசப்பாமே.

௩௭௭. பற்றுதலாய்க் கத்தர் திருப்
பாடனைத்துஞ் சிந்தைசெய்தாற்
சிற்றின்ப வாழ்வெனக்குச்
சேரவெறுப்பாமே.

௩௭௮. ஐயோ கடவு
ளருங்கொலையாய்ச் செத்தத்தினால்
மெய்யாயுலக
வெகுமானம் வேண்டேனே.

௩௭௯. குற்றமில்லான் பட்ட
கொடூரமெல்லாஞ் சிந்தைசெய்தாற்
சற்றெனினும் பாவவழி
தன்னினடவேனே.

௩௮௦. காரணனார் பட்ட
கனதுயர் மேற்காதல் வைத்தா
லாரென சொன்னாலு
மாங்காரங் காட்டேனே.

௩௮௧. தேவன் மடிந்த
திருச்செயலையானினைந்தா
லாவிபோமட்டுமுல
காசைவரமாட்டாதே.

௩௮௨. அத்தன் பொறுத்த குற்ற
மத்தனையும் யானறிந்தால்
மெத்தனைவையல்லாமல்
மேட்டிமையைக் காட்டேனே.

## ௨0- மன்றாட்டு.

௩௮௩. பாடான விப்பெரிய
பாட்டிலென்றன் பங்கருளக்
கூடாதுபோமெனவே
கோபித்துச் சொல்வீரோ.

௩௮௪. அலகையடியானெனையே
யன்புமகவாக்கி
வலிய பிசாசாள
மறுத்துங் கொடுப்பீரோ.

௩௮௫. தேவரீர் பட்ட
சிலுவையின வாதைகட்குப்
பூவுலகிற் பாதகன்செய்
பொல்லாங்கோ ரீடாமோ.

௩௮௬. அட்டதிக்கோர் பாவ
மனைத்துஞ் சகித்தருளு
மட்டிலானின் பொறைக்கென்
வஞ்சமலையாமோ.

௩௮௭. அன்பாகக் கைநீட்டி
யாவரையுங் கூவினபின்
என்பாவத்தைப் பெரிதா
யெண்ணியெனைத் தள்வீரோ.

௩௮௮. எத்தனையோ வத்தனையே
ரொன்றுமுமக்கேவல் செய்யச்
சத்துருவாய் நான்போகச்
சம்மதியங் குண்டாமோ.

௩அகூ. கோணுமலென்னையாட்
கொள்ளநீர் வந்துமறப்பன்
வீணைய நரகில்
விழப்பார்த்திருப்பீரோ.

௩கூ0. கிட்டவரும் பாவியெனைக்
கிட்டாமற்றள்ளி விடப்
பட்டுருவ ஆணிதைத்த
பங்கயத்தாற் கூடாதே.

௩கூக. பத்தியினுலும்மைப்
பணையிலறைந்தென் முனமே
வைத திருந்தாலென்னை விட்டு
மாறிநீர் போவதெங்கே.

௩கூஉ. எங்கோனுதிர்தத
இரத்தமெல்லாம் பாவிகட்கே
பங்கானதல்லோவென்
பங்குதரவொண்ணுதோ.

௩கூ௩ அக்கிரமக்கார
ணகந்தைதனைப் பாராமற்
பக்கிஷமாய் நீரடைந்த
பாடதெல்லாம் பார்த்தருளும்.

௩கூ௪. கொன்றவரைக் காக்கக்
குருசினில் மன்றுடியதோர்
நன்றெனக்கெந்நாளும்
நயந்துசெய்யுங் கர்த்தாவே.

௩கூ௫. உருகிவலப்பாகத்
துமைநோக்கி நின்ற
திருடனைப் பார்த்த கண்ணுற்
றீபாவியைப் பாரும்.

௩௯௬. பொங்கித் தரையிற்
பொழிந்த திருவுதிரத
திவலெனுள தீதார் தூளிய
தென்னுந தெளித்தருளும்.

## உக. செபம்.

௩௯௭. வேதாவே நின்சுதனை
வேண்டியெனை நோக்கித்
தீதானயாவினையுந
தீர்த்தெனை யாட்கொண்டருளும.

௩௯௮ பாடுபட்ட சுதர் திருப்
பாடெல்லாம பார்த்திரங்கிக்
கேடுகெட்டவென் மேற்
கிருபைசெய்யுமாண்டவனே.

௩௯௯. பாதுகாத்துன்றன்
பரிசுத்த மைந்தனுட
நீதியினலென்னை முற்றும்
நீதிமானுக்கிவிடும.

௪௱. பரிசுத்த ரூபிப்
பரனே நின்னன்பை
வரிசித்தென் கன்மனதை
மாற்றியெனைச் சீர்ப்படுத்தும்.

௪௱க. காந்திமிகுமக்கினியின்
கண்ணான விஸ்பிரீததுச்
சாந்துவே யென்னுளத்திற்
றங்கியெனக்கன்பு செய்யும.

௪௱உ. திரியேக வஸ்துவெனுந்
தேவபொருளே யென்
னறியாமை நீங்க
வனுக்கிரகஞ் செய்தருளும்.

௬௱௩. மோசப்படுத்திவரு
மூர்க்கப் பிசாசையெல்லா
மேசுவே கோபித்
தெனைவிலகச் சொல்வீரே.

௬௱௪. என்ன சீருண்டா
மிதையந் திரும்பாட்டா
லன்னதற்கு நீரே
யருள்புரியுமற்புதனே.

௬௱௫. வெள்ளமெனத் தெய்வீக
மானதயா மேவி
உள்ளமனைத்து
முருகுதற்குச் செய்வீரே

௬௱௬. அண்ணலுமக்கேறு
தனைத்தையும் விட்டோடி
யெண்ணம் வைத்தும்மோடயிக்க
மாயிருக்கச் செய்வீரே.

௬௱௭. எல்லா லௌகீக
யிச்சைகட் கெல்லாமாண்டு
நல்லாளாயுன்றனக்குள்
நானிலைக்கச் செய்வீரே.

௬௱௮. என் விசுவாசத்தை
யெடுக்கப் போர்செய்து வருந்
துன்மனசை வெல்லத்
துணைநீர்தான் கத்தாவே.

௬௱௯. மீட்பரே யென்றன்
விசுவாசத்தைத திடத்தித்
தீட்படருமாயை யென்னைச்
சேராமற காத்தருளே

௬கய. பாங்குபெற நித்தியமும்
பத்தியினிற் கூடாகி
யோங்கி வளர
வுமதுதவி செய்வீரே.

௬கக. கெட்ட இச்சையாவுமெனை
கிட்டாமலே முறியக்
கட்டளை செய்யுங்
கருணை மனுவேலே.

## உஉ பத்தி.

௬கஉ. இத்தகமையாக
இரங்கிப் புலம்பி நின்று
வித்தகனாலயத்தில்
மேவிவந்த கும்பினுடன்.

௬கந. திரும்பியெனையாண்ட
தேவன் மரணத்
தருந்துயரங் கொண்டதெல்லா
மாற்ற முடியாதே.

௬கச. எநதை விலாவி
னிருகால் கரத்திலுற்ற
வைந்து வடுவென்ற
னகத்திற்றழும்பாமே.

௬கரு. கார்த்த கொலைஞர்
கடவுடிருச் சிரத்திற்
சேர்த்தமுடி முள்ளெனது
சிந்தைதனிற்றைததிடுமே.

௬கசு. ஆண்ட வெனதைய
னருங்கால் கரநதுளைதத
நீண்ட விருப்பாணி யென்ற
னெஞ்சைத துளைத்திடுமே.

சுகஎ. சீலமனுவேலின்
றிருவிலாவைத் திறந்த
வேலின்முனை யென்னுளத்தை
மேவி யுறப்பாய்ந்திடுமே.

சுகஅ. அந்நாளிலண்ணை
லடைந்த துயரத்தனையு
மிந்நாளெனின் மனதுக்
கெண்ணிலா வாதையதே.

## உரு. மனஸ்தாபயோசனை.

சுகசு. இச்சணமோ வல்லதுதா
னின்னமொரு நாழிகைக்கோ
யெச்சமயஞ் சாவுவரு
மென்றறிய மாட்டேனே.

சுஉ0. ஆங்காலமெல்லா
மதன்மத்திலே நடந்து
போங்காலமாராலாம்
புண்ணியத்தைச் செய்வதற்கே.

சுஉக. சுகத்தோடிருக்கச்
சுகிர்த வழிசெல்லாா
மிகததான வியாதியுற்ற
வேளைதனிற் செலவாரோ.

சுஉஉ. இளவயதினன்மை செய்யா
தினனுயிர்போம் போ
துளமகிழும் ஞானத்
துறுதியெனக்குண்டாமோ.

சுஉரு வாராப்பிணியு
மருந்தும் வயித்தியனும்
நேராகச் சூழுமந்த
நேரமறஞ் செய்வேனோ.

௪௨௪. ஒப்பாரி சொல்லி
யுறவின் முறையார் புலம்பு
மப்போ தவம்புரிய
ஆர்க்குமனதாகும்.

௪௨௫. பெண்டிரும் பிள்ளைகளும்
பெற்றவருஞ் சுற்றியழக்
கண்டாற்றிடாயைக்
கதிவழியிற் சேர்வதெங்கே.

௪௨௬. இனியினி யென்றெண்ணி
யிருக்கையிலே சாவு
நினையாதாற்றார் பிறகோர்
நேரம்வா வென்பேனோ.

௪௨௭. இருளோ பகலோ
எதிலோ இறைவன்
திருடனைப்போல் வந்தாலென்
செய்கைக்கென் சொல்வேனான்.

௪௨௮. ஆற்றும மொன்றே
யதையுமிழந்தக்கால்
வேற்றுமொரு வஸ்துவினால்
மீட்கமுடியாதே.

௪௨௯. இன்னபல ஞானமெல்லா
மெண்ணியெண்ணிக் கற்றாலும்
பின்னுமுனக்கென் மனமே
பேரின்பம் வேம்பாமே.

## ௨௪. பிரதிக்கினை.

௪௩௦. எறிந்துவிடு மாங்கிஷத்தி
னிச்சையழிவாமென்
றறிந்தாயினியா
கிலும்பவத்தைச் செய்யாதே.

சஙக. பார்க்கு முலகப்
பவிசமெல்லாம் பாழ்மனமே
நீர்க்குமிளி போலாம்
நினைவை யதில் வையாதே.

சஙஉ. ஆடம்பரங்க
ளலைகயிறொாதனைகள்
கேடென்று தளளிக்
கிறிஸ்துவைப் பின்செல்வாயே.

சஙங. வானத்தின் கீழனைத்து
மாயையென்று கண்டாயே
ஞானத்தான்றனுமதை
நாட்டிவைத்துப்போறனே.

சஙச. என்னவந்தாலு
மினியுமகநேருத தொன்று
மென்னையழுக காக்கா
திருப்பேன் மனுவேலே.

சஙரு தேவனே யும்மைச்
சிநேகிப்பேனல்லா தென்
சீவனிலெல்லாம் பவத்தைச்
செய்யத் துணியேனே.

சஙசு. பொல்லாக் குணத்தை முற்றும்
போக்கியென்றன் சீவனையு
மெலலாத்தையும் பார்க்க
யேசுவை நேசிப்பேனே.

## உரு. நம்பிக்கை.

சஙஎ. சொற்ப வுலகச்
சுகத்தையற வெறுத்தாற்
றற்பரனைக் கண்ணாரத்
தான்கண்டு வாழ்வேனே.

௪௱௨. பவித்திரஞ் செய்தென்னைப்
பரிசுத்தமாக்கிக்
குவித்தென்னகத்தைக்
குணத்தில் வைத்தார் சுகமே.

## ௨௯ காதலன் புகழ்ச்சி

௪௱௩. ஒன்றான வேதத்தி
னுட்பொருளை யுணர்த்திற
சென்றுணுமேக
திரித்துவத்தைப் போற்றிசெய்வாம்.

௪௱௪. வேதமுதலை
வினையறுத்த வித்தகனை
மாதவனை ஞான
மணவாளனைப் பணிவாம்.

௪௱௫. புண்ணியனை மாளாத
பொக்கிஷத்தைப் பக்கிஷத்தை
விண்ணவனை மேலவனை
மேசியாவைத் தொழுவாம்.

௪௱௬. பூரணனை மெய்வேத
போதனைப் புராதனனைக்
காரணனை யூதர்குலக்
காவலனைக் கைதொழுவாம்.

௪௱௭. சுத்த சுவிசேட
துரந்தரனைத் தூயவனை
முத்திவழி காட்டவந்த
முப்பொருளைப் போற்றிசெய்வாம்.

௪௱௮. நின்றநிலை கெட்டவனை
நீதிவழியிற் சேர்த்தே
யன்றுமுதனன்று செய்த
வாண்டவனைப் புகழ்வாம்.

௪௫௯. உருக்கத் தயவா
யுயர்ந்தோனை யுண்மைப்
பெருக்கத்தானந்தனைப்
பேணி நமஸ்கரிப்பாம்

௪௬௦. என்றனுயிர்க்காக
விரங்கித் தனதுயிரைத்
தந்தை தனக்குப் பெலியாய்த்
தந்தானைச் சிந்தைசெய்வாம்.

௪௬௧. செங்குருதி பானமதாய்ச்
செய்யவுடற் போசனமாய்ப்
பங்கமறத் தந்தெனைக் கண்
பார்த்தானைத் தோத்திரிப்பாம்

௪௬௨. முந்தினனைப் பிந்தினனை
முன்னனைப் பின்னனை
வந்தனையு வந்தானை
வந்தானை வாழ்த்தல்செய்வாம்

௪௬௩. சமஸ்த வரப்பிரசா
தத்தாவியானை
நமஸ்கரித் தென்னாளுமிந்த
நானிலத்தில் வாழ்ந்திருப்போம்.

௪௬௪. மங்களமனுதியர்க்கு
மைந்தனுக்குமா வியாக்குந்
தங்குமனந்த
சதாகாலமும் வந்தனமே.

## ௨௭. திருச்சபை வாழி.

௪௬௫. வாழி கிறிஸ்தோரவையு
மாறாத சத்தியமுஞ்
சூழுமறையோர்
சுகிர்த நெறியே வாழி.

௬௬௬. காரணதபோதனர்கள்
கற்றுணர்ந்த சாஸ்திரிக
ளாரண புராண
வறிஞர்களெலாம வாழி.

௬௬௭. ஞாயத்துரைகள்
நடத்திய செங்கோல் வேந்தர்
தேயத்ததிகாரஞ்
செய் நீதியோர் வாழி.

௬௬௮. நற்றரும வான்களுடன்
ஞாயவுபதேசியர்கள்
கற்றகலைக்கியானக்
கவிஞர்களெலாம் வாழி.

௬௬௯. வரத்தர் தவத்தர்
மயக்கமறுத்தமாக்கள்
விரத்தத்துவத்தர் முத்தர்
வித்தியாதரர் வாழி.

௬௭௦. செய்ய சபையிற்
செழிக்கும் விகவாசிகடா
மையமற்றெறந்நாளு
மம்புவியிலே வாழி.

௬௭௧. சநததிகள் வாழ்ந்து
சகல சுபசோபனமாய்ச்
சிந்தை மகிழ்ந்தோங்கிச்
சிறந்திருக்கவே வாழி.

௬௭௨. ஆற்றும சரீர சுக
வாரோக்கியத்துடனே
மாற்றமிலாதென்று
மகிழ்ந்திருக்க வாழியதே.

## உஅ. பேரின்பக் காதலளவு.

சஎரு. வாட்டமில்லாந் தேவ
சகாயன்மகன் மதுரை
நாட்டினெல்லை வாழ்வேத
நாயகன் பாடலதே.

சஎசு. யேசுபிறந் தாயிரத்தெண்
ணூற்றுப் பதின்மூன்
றுசதில்லான் காத
லறைந்தவாண் டானதுவே.

சஎஎ. காரணனார் பேரின்பக்
காதலெனும் நூலளவ
தேரிசைந்த நானூற்
றெழுபததைங் கண்ணியதே.

முற்றும்.



# பிரலாப ஒப்பாரி.



## காப்பு

திருத்தய வுணரார் செய்த
தீமையாற் பாடுபட்டுத்
தருச்சிலு வையிற்றஞ் சீவன்
றந்துலகத் தைமீட்ட
அருட்கிறிஸ்துவுக் கன்பாய்ப் பிர
லாப வொப்பாரி சொல்லப்
பரத்தினி ஸ்பிரீத்துச் சாந்தெம்
பரிசுத்த ரூபி காப்பாம்.

## க தேவவணக்கம்.

க. சீராதி கத்தன்
றிருமரணத் தைத்தேர்ந்து
பேராய்ப் புலம்பும்
பிரலாப வொப்பாரி.

உ. தந்தைப் பிதாவே
தயவாகக் கேட்டிரங்கி
மைந்தனுக்காய் வேண்டி
மகிழ்ந்தெனையாட் கொண்டருளே.

ந. தப்பாக் கிறிஸ்து
தயாபரா நின்மீது
ஒப்பாரி சொல்ல
வுவந்தெனுக்கு வாக்கருளே.

௪. நித்திய பிதாவினொரு
நேயகுமார னாரக்கு
மததியஸ்த னேக
பரிதத புலமபலுக்கு.

௫. பாவிகளைச் சுத்தாங்கம்
பண்ணுகின்ற மெய்ப்பரிசுத்
தாவியே முன்னின்
றனுக்கிரகஞ் செய்தருளே.

## ௨. அவையடக்கம்.

௬. மூப்பான வேத
முதன்மையோ ரிப்புலம்பல்
தீழ்ப்பான பாடலெனச்
செப்பமனங் கொள்ளாரோ.

௭. எபபா வலமோனு
மேமைமதி யாற்புலம்பு
மொப்பாரிக் கென்மே
லொரு குறையுஞ் சொல்லாரோ.

## ௩. தசாங்கம்.

௮. சீனு மலையிற்
றிடமெனச் சீயோனின்ற
மானூர் பொருட்டான்
மடிந்த கொல்க தாமலையான்.

௯. சீவப்பெரு நதிக்குஞ்
செல்வயோர்தானதிக்கு
மாவிப் பெருக்கி
னகண்டகிரு பாநதியான்.

௧0. இவ்வுலகின் ராச்சியந தா
னென்னுதல்ல வென்று சொன்ன
திவ்விய பேரின்பச்
செயல்வான ராச்சியத்தான்.

கக. சாத்தா னடிமைத்
தனத்திலுற்ற பாவிசுழுருக்
கேற்தான் கையேற் தான்றா
னேத்தான சரேத்தான்.

கஉ. ஒசியன்று ரட்சியுமென்
றோலமிட மாந்தர் குழா
மீசுரத்தோ டேறிவரும்
வேசரியாம் வாரணத்தான்.

கரு. சீவனுள்ளோர் தங்களுடன்
செத்தோரையு மெழுப்பி
மேவிநடுத் தீர்க்கவரும்
வெள்ளைமே கப்பரியான்.

கச. சத்துருக்களோடி விழச்
சர்ப்பனைப் பிசாசலற
எத்திசையுமேற் கொண்
டிலங்குசிலு வைக்கொடியான்.

கரு. வானவரு மானிடரும்
வாஞ்சையினு லுச்சரிக்குஞ்
சேனைவித மந்திர
தியான செப மாலையினன்.

கசு. வாழ்ந்தோருங் கூடிவர
மாய்ந்தோரொலா மெழும்பச்
சூழ்ந்தே ழெக்காளந்
தொனிக்குந் தனிமுரசான்.

கஎ. பூதலத்தோர் பாதலத்தோர்
பொன்னுலகத் தோருமவந்து
பாதந்தொழுது
பணிந்துநிற்குஞ் செங்கோலான்.

## ச. தியானம்.

கஅ. இத்தகமை வல்லபத்தி
யேசுக் கிறிஸ்திறைவன்
சித்தம்வைத்துப் பாடுபட்டுச்
சீவனையும் விட்டிறந்தான்.

கக. ஆறு தினத்தி
லனைத்தையுஞ் செய்தோனுருவ
மாறிக் கபால
மலையிலுயிர் விட்டிறந்தான்

உ0. நல்குந் திருக்கருணை
நாயகனு ராடுகட்காய்க்
கொல்கதா வெற்பிற்
குருசிலறை யுண்டிறந்தான்.

உக. சீவன் மடிந்து
சிலுவையினிற் றொங்கிறதைப்
பாவிகளாரேனுமுண்டோ
பார்க்க வரமாட்டீரோ.

உஉ. அன்பிற்குரிய
அருமைக் கிறிஸ்தோரே
யென்பிறகே கூடி
யிரங்கி யழமாட்டீரோ.

உங. சொந்தப் பிராணர்க்குச்
சூழ்ந்த துயா ரத்தனையும்
வந்து கண்ணுற் காண
மனதிலையோ சீயோனே.

உச. ஆற்றுமநேச
ரரும்பாடு பட்டிறந்தான்
போற்றுஞ்சபையே
புலம்பவர மாட்டீரோ.

உரு. என்னைபோற் பொல்லாதா
ரிங்கிராரிங்கிருந்தா
னின்னிப்போய்க் கத்தருக்கென்
றொப்பாரி சொல்லீரோ.

உசா. அன்றெருசலேமி
லழுதுசென்ற மாதர்பின்போ
யின்று புலம்ப
எழுந்து வரமாட்டீரோ.

உஎ. மெய்ப்பாஞ் சபையே
விசுவாசக் கண்ணோக்கி
யொப்பாரி சொல்லி
யுறுதுயரங் கொள்ளீரோ.

## ரு. ஒப்பாரி.

பாடுகளின் றொகை.

‡ "என்னையா தயாபரனே
யென்ற வார்த்தையை அடிதோறுந்
தொடர்ந்துகொள்க."

உஅ. ஆதிபரப்பொருளே †
ஆட்கொண்ட நாயகமே
மாதுவினை தீரவென்றே †
வையகத்தில் வந்தீரோ.

உகூ, வேதம் நிறைவேற்றி
வெற்றி முடிசூட்டப்
பாதகருக்காய் வேண்டிப்
பாடுபட வந்தீரோ.

ஙo. உன்னதத்தின் மெய்வாழ்வே
யொன்றான கத்தாவே
என்னை யிரட்சிக்க
இரக்கமுமக் குண்டாச்சே.

௩௧. சங்கையின் ராசாவே
தாழ்த்திபண்ணப் பட்டீரோ
பங்கமுற லானீரோ
பாவியைப் போனின்றீரோ.

௩௨. வானத்தின் வேந்தே
மகிமையெல்லாம விட்டீரோ
ஈனத்தனமா
யிகழ்ச்சியெல்லாம பட்டீரோ.

௩௩. அனனைவினை தீர்கக
அருமபாடடைநதீரோ
மன்னவனே பாதகர்ககாய்
வன்கொலைக்கு ளானீரோ.

௩௪. அமபரமும வானு
மனநதவுல குமபடைத்த
எம்பிரானே நீரதா
னேழையைப் போலானீரோ

௩௫. அண்டமெலலாந் தந்து
அனைததும் படைத்தோனே
கொண்ட இந்தக் கோலங்
கொடுமையலலோ கததாவே.

௩௬. கட்டுண்டு நின்றீரோ
கள்ளனைப்போற் சென்றீரோ
வெட்டுண்குமம பாதகரை
மீட்டுவிட வேண்டினதோ.

௩௭. பண்ணிய நிந்தை
பரிகாச கோரணிக
ளெண்ணி முடியா
இகழ்ச்சியெல்லாம் பட்டீரோ.

௩௮. முக்கா டிட்டாரோ
முகத்தி லறைந்தாரோ
எக்கேடுங் கெட்டோர்க்
கிரங்கமன தானீரோ.

௩௯. மறுதலிக்கப் பட்டீரோ
வன்சிறைக்கு (ளாகி) ளானீரோ
பொறுமையுடன் கேட்டீரோ
பொல்லாதோர் தூஷணத்தை.

௪௦. கற்றூணிற் சேர்த்துக்
கடூரத் தடித்தாரோ
பற்றுதோ இப்பாடு
பாவிகளை மீட்பதற்கு.

௪௧. வாராலடிக்க
மருகிநிற்க லானீரோ
ஆராரை மீட்க
அரிதாகு மப்பாரே.

௪௨. கோர்த்த இருப்புக்
கொடுக்குச் சவுக்கதனு
லார்த்தடிக்கச் சேர்வையெல்லா
மாங்காரங் கொண்டாரோ.

௪௩. சீவவிருட்சக் கனியைத்
தின்றிருக்க மாட்டாமற்
பாவி பறித்த
பழிவந்து நேர்ந்ததுவோ.

௪௪. நீதியில்லான் வீடு
நிறைந்தரத்தக் காடாச்சோ
வேதமில்லான் வீடு
வெநதோன்றிக் காடாச்சோ.

சரு. ஞாயக் களரி
நனைந்து பெருக்காச்சோ
மாயக் களரி
வழிமுடியச் செங்நீரோ.

சசா. பெருகி ரத்தமோடப்
பிலாத்தின் மனங் (குன்றி) குன்றலையோ
அரண்மனை யாஸ்தான
மதிர்ந்து நடுங்கலையோ.

சஎ. சாலேமின மாதர்
தயங்கிப் புலம்பலையோ
ஓலோல மோலமென்று
ஒப்பாரி சொல்லலையோ.

சஅ. யேருசலேம் பெண்க
ளிரங்கிப் புலம்பலையோ
மாரிபோற் கண்ணீர
வழிந்தோடக் காணலையோ.

சகூ. தாவீதின் வீட்டார்
தனித்துப் புலம்பலையோ
பாவாயுருகிப்
பரதபித்து நிற்கலையோ.

ரு0. சீயோன் குமாரி
திடுக்கிட் டலறலையோ
பாயாதோ கண்ணீர்
பரதேசுத் தோட்டமட்டுமே.

## ரு. பரிகாச ராசாவினுளுகை.

எஉ. சங்கீதம்.

ருக வெள்ளையாைச் சட்டையிட்டு
மீண்ட திருமேனியிலே
தெள்ளுஞ் சகலாத்துச்
செஞ்சட்டை யிட்டாரோ.

ருஉ. முள்ளினைமுடி சூட்டினரோ
மூர்க்கத் தனமுநதனரோ
வள்ளலெனச்செய்து
மதிமுகத்திற் றுப்பினரோ.

ருந. பரிகாச ராசனெனப்
பாதகர்செய் (கோலம்) கோலமதை
வரிசையெனக் கொண்டீரோ
வாழ்த்தினதுங் கேட்டீரோ.

ருச. செங்கோல் மூங்கிற்கோலாய்ச்
செங்கைதனிற் கொண்டீரோ
எங்கோனே யூதாகளே
யின்றாளப் போறீரோ.

ருரு தாவீதின் வீட்டார்முன்
சந்தித்துக் காணுரோ
கோவேந்தர் கப்பமிட்டுக்
கும்பிட்டு நிற்காரோ.

ருசு. பன்னிரு பிதாக்கள்
பணிந்துநின்று போற்றாரோ
அன்னிய தேசத்தி
னரசரெதிர் கொள்ளாரோ.

ருஎ. இஸ்ரேவேற் றேசமெங்கு
மெக்காள (மூதி) மூதாரோ
திசைதோறும் வேந்தர்
தெரிசனைக்கு வாராரோ.

ருஅ. மூச்சாஸ் திரிமார்
முடிமன்னர் போற்றுரோ
எச்சாதியுஞ் சேவித்
தேற்றித் தொழுகாரோ.

௬௯. சித்திர பானுள்ளமட்டுஞ்
செங்கோல் செலுத்தீரோ
சுத்த நிலாமட்டுஞ்
சுயாதிபதியாளீரோ.

௭0. வனாந்தரத்தார் வந்து
வணங்கிப் (பணிந்து) பணியாரோ
அனாந்தரமானோரு
மடைக்கலமென் றண்டாரோ.

௭௧. தற்சீசின் ராசாக்கள்
சங்கைசெய்து நிற்காரோ
உச்சிதங்கள் கைகொண்
டுவந்து பணியாரோ.

௭௨. தீவுகளின் மன்னர்
திறைகொண்டு வாராரோ
காவலர்காணிக்கையிட்டுக்
கைகட்டி நிற்காரோ.

௭௩. வெகுமானங் கொண்டுவந்து
வேற்றரசர் (போற்றி) போற்றாரோ
தகுமான சங்கைத்
தளபதிகள் வாழ்த்தாரோ.

௭௪. பூமியி னெல்லை யெல்லாம்
பூபதிமேற் கொள்ளாரோ
சாமிக் கிடும்பொன்
சபேயாவின் பொன்னலவோ.

## ௭. சிலுவை நடை.

௭௫. கள்ளன் விடுதலையாய்க்
காராள வங்கிஷத்து
வெள்ளன் கொலையாக
வேதன் விதிவசமோ.

௬௬. மூப்பான் றலைவன்
முதன்மையா னெம்மை யன்பாய்ப்
பாப்பான் மடியப்
பரமன் விதிவசமோ.

௬௭. சுத்திகரிப்போன்
சுயாதிபதி சாலேமின்
சத்திரியன் ருவீது
சாகத் தீர்ப்பானோ

௬௮. உசிதத் தயவா
லுலகை வசமாக்கும்
வசியர் குலப்பெருமான்
வன்கொலைக்குளானானே.

௬௯. சாதகிர புராண
சமஸ்த வேதாக்ஷாரத்தின்
சூத்திரன் சாகத்
துணிந்துமனங் கொண்டானே.

௭0. செஞ்சோதி நாட்டான்
றிருப்பத் தூர்க்கோட்டை கட்டத்
தஞ்சாவூருக்குத்
தனிவழியே போறானே.

௭௧. குருதிவெள்ள மோடக்
குருசைச் (சுமந்து) சுமந்தீரோ
மருகி மருகி
வழிப்பயணம் போறீரோ.

௭௨. பாரச் சிலுவைதனைப்
பாவிகளுக் கோசரமோ
கோரச் சிலுவைதனைக்
கொண்டுசெல்லக் கூடலையோ.

எ௩. சீமோன் சீரேனே
திடவானேெ வும்மை விடக்
கோமான் சுமந்த
குருசெடுக்க வல்லவனே

எச. உலகத்தைத் தாங்குகின்ற
ஒப்பிலாக் (கததா) கத்தாவே
கலைச்சிலுவை
கனத்த சுமையானதுவோ.

எரு. வானத்தை தாங்குகின்ற
மட்டில்லாவல்லவனே
ஈனச்சிலுவை
யெடுத்தேக ஏலலேயோ.

எசு. அண்டமெல்லாந் தாங்கு
மனாதி பரப்பொருளே
கொண்ட குருசெடுக்கக்
கூடலேயோ அப்பாரே.

எஎ. அநதர சொர்க்க
மகிலமெல்லாந் தந்தோனே
பந்தச்சிலுவை மகா
பாரமோ ஐயாவே.

எஅ. எந்தவூரையா நீ
ரெங்கையிருந்தெமக்கு வந்தீர்
சொந்த வூரிலுமக்குத்
துன்பம் வநது நேர்ந்ததுவோ.

எகூ. சிலுவைசுமந்து (செருசகளத்தைநோக்கி)
செருக்களத்துப் பாதையிலே
மெலிவாய் நடந்து
விரும்பிநீர் போறதெங்கே.

௮0. குருசைச்சுமந்து (கொலைக்களத்தை நோக்கி) கொலைக்களத்துப் பாதையிலே
வரிசைத்துரையே நீர்
மாளுதற்கு போறீரோ.

௮௧ ஆதாம் புரிந்த
அரும்பாவந் தீர்ப்பதற்கு
நாதாநீர் போறவழி
நானறிய மாட்டேனே.

௮௨. மாதா புரிந்த
மகாபாவந்தீர்ப்பதற்கு
வேதாநீர் போற
விதந்தெரிய மாட்டேனே.

௮௩. கொல்கதாப் பாதை
கொடுந் தூரமானதுவோ
ஒல்கலையோ நெஞ்ச
முருகாதோ பாவிகட்கு

௮௪. மலைப்புறத்துப் பாதை
(வழிதொலையாதோ) வழியுந்தொலையாதோ
கொலைக்களத்துப் பாதையிலே
கோட்டிமெதத வுண்டாமோ.

௮௫. கள்ளருடன் கூடிக்
கபாலமலைக் கேகுதற்கு
மௌள நடந்தால்
வெகுதூரம் போவதெப்போ.

௮௬. கூனிக் குனிந்து
குருசெடுத்துப் போகையிலே
மானக்குலப் பெண்
மயங்கிவிழ மாட்டாளோ.

அஎ. சீயோன் குமாரியுட
சிந்தை தடுமாறுதோ
ஓயாமற் கண்ணீர் விட்
டொப்பாரி சொல்லாளோ.

அஅ. நெஞ்ச முருகி
நெடுந்துயரம் பூணுளோ
அஞ்சியஞ்சிப் பேதை
யதிர்ந்து நடுங்காதோ.

அகூ. சாலேமின் பெண்கள்
தலைவிரித்துச் செல்லாரோ
மேலான ராசாத்தி
விம்மியழ மாட்டாளோ.

கூ0. எருசலே மாத
ரெதிர்கொண்டு செல்லாரோ
மார்பி லடித்து
மனைக்குத் திருப்பாரோ.

கூக. தாவீதின் புத்திரியின்
சத்தமெங்கும் கேளாதோ.
ஏவாளின் சத்த
மெருசலையி லெட்டாதோ.

கூஉ. சாறாளின் சததந
தனிவழியிற கேடபதெனன
மாறாத துக்க
மனத்துயரங் கொண்டாளோ.

கூரு. அம்மாள் ரேபக்கா
ஓலறுகிற சத்தமென்ன
எம்மாதி பனுக்
கிடுக்கண்வந்து நேர்ந்ததுவோ.

கூச. லேயாளின் சத்தம்
நெடுந்தூரங் கேட்பதென்ன
ஆயாச மாகி
யருந்துயரம் பூண்டாளோ.

கூரு. ராகேல் புலம்பி
நடுத்தெருவிற் செல்வதென்ன
போகாத் துயரம்
பொருந்தினதோ பொற்கொடிக்கு

கூசு. கன்னிமரித்தாயார்
கனிந்துருகுஞ் சத்தமென்ன
உன்னி யிதையத்
தொருவாளுருவினதோ.

கூஎ. அன்னை மரியம்மா
ளழுதுருகுஞ் சத்தமென்ன
மன்னு மிருதயத்தில்
வாளுருவிப் பாய்ந்ததுவோ.

கூஅ வியாகுல மாதா
மிகுதுயரங் (கொண்டாள்) கொண்டதென்ன
தயாபரருக்கேதோ
சதிமரணம் வந்ததுவோ.

## அ. சிலுவை மரணம்.

கூகூ ஏதன் மலையாதாமு
மேவாளுஞ் சீவனுறக்
காதல் மலையான்
கபாலமலை வந்தானே.

ா. நல்குந்தி ருக்கருணை
நாதன் கொலையாகக்
கொல்கதாக் கோடு
குறுகி வந்து நின்றதுவோ

௱௧. ஆளுந் தயாபத்
தனாதி திருவுளமே
போளங் கலந்த
புளித்த ரசங் கொள்ளலையோ.

௱௨. ஆடை களைநதே
யரும்பாதகா நடுவே
நீடும் பொருளை
நெடுங்குருசி லேற்றினரோ.

௱௩. செய்ய மலர்ப் பதத்துஞ்
செங்கரத்து மாணிகளால்
கைதுருவத் தைக்க
நடுக்கமடைநதீரோ.

௱௪. கள்ளர் நடுவாகக்
கானாடாள வநத
வள்ளல் சிலுவை
மரத்தேற்றப் :பட்டாரோ.

௱௫. ஆரியரு மூப்பர்களு
மவ்வழியிற்செல்வோருஞ்
சோரர்களுஞ் சேவகருந்
தூஷணங்கள் சொன்னாரோ.

௱௬. நாடித் தவித்து
நவிந்த இறையவர்க்குக்
காடி கொடுத்தாரோ
கடற்காளானா னிரப்பி.

௱௭ சிலுவை மரத்தேழு
திருவசனஞ் (சொல்லி) சொன்னபின்பு
வலிய பிதாவைக் கூவி
மாய்ந்துயிரை விட்டீரோ

௱௮. ஆகாத பாவிகளி
னக்கிரமத்தைத் தொலைக்கச்
சாகாத வஸ்து
தமதுயிரை விட்டாரோ.

௱௯. ஆடுகளுக்காக
அருமையுள்ள நலமேய்ப்பர்
பாடுமிகப் பட்டுப்
பரிந்துயிரை விட்டாரோ

௱௰. மைந்தரை யுண்டாக்கி
வைத்த தயவுக்காக
எந்தை விலாவைத் துளைக்க
ஈட்டியொன்று வேண்டாமோ.

௱௰௧ மாயப் பிசாசினுட
வல்லடிக்குத் தப்பவைத்த
ஆயன் விலாத் துளைக்க
ஆலவேல் வேண்டாமோ

௱௰௨. மண்ண திராதோ
வானுலகுங் கேளாதோ
விண்ண திராதோ
மேலுலகங் கேளாதோ.

௱௰௩. சூரியன் மங்கித்
துயர மடையாதோ
பாரும் நடுங்கிப்
பருபபதங்கள் வீழாதோ.

௱௰௪. குன்று பிளவாதோ
கொல்கதாச் சாயாதோ
சென்ற திருக் கோவிற்
றிரை கிழிய மாட்டாதோ.

கக௫. கேரூபீன் கூட்டங்
கிலேசித்துப் பார்க்காரோ
சேரூபீங் கூட்டந்
திகைத்து நின்று நோக்காரோ.

கக௬. கல்லறை வாசற்
கபாடந் திறவாதோ
வல்லவன் போட்ட
மதிலிடிந்து வீழ்காதோ.

கக௭. அந்தரமும் வானு
மனந்த சராசரமுஞ்
சந்திரனுந் தாரகையுந்
தத்தளித்து நிற்காதோ.

கக௮ வேதனையடைந்த
வியாகுலத்தைக் கேட்டவுடன்
பூதியங்கள் வெந்து
புகைந்துருகிப் போகாதோ.

கக௯ வெளிச்ச மிருளாகாதோ
(விண்ணுலகு மங்கி) விண்ணுலகு மங்காதோ
பளிச்சென்ற யேருசலேம்
பட்டணந் தீப்பற்றாதோ.

க௨0. பாதாளமஞ்சிப்
படுசாம்பலாகாதோ
வேதாள மஞ்சி
விழுந்தோடிப் போகாதோ

## கூ. துக்கிப்பு.

### சகரி. 12: 10—14.

க௨க. ஆடித்திருவிளையாட்
டத்தனையுஞ் செய்தோனை
வேடிக்கை பார்க்க
மிகுந்த திரள் கூடாதோ.

கஉஉ. தாவீதின் வீட்டார்
தனித்தனி துக்கிககாரோ.
பாவாணர் வீட்டார்
படிப்படி துக்கிக்காரோ.

கஉ௩. நாததானின் வீட்டார்
நலிந்து புலம்பாரோ
கோததிரப் பிதாக்களெல்லாங்
கூவி யழமாட்டாரோ.

கஉ௪. இலேபித்தர் கூட்ட
மிரங்கு (கண்ணீரோட்டம்) கண்ணீராறோட்டங்
கலாபித்த பேருங்
கனிந்துருக மாட்டாரோ.

கஉ௫ சிமேயி வங்கிஷமுந்
தேவிமாருந் தனித்து
மாமா ரடித்து
வலுமுழக்கஞ் செய்யாரோ.

கஉ௬. குத்தினவர் நோக்கி நின்று
கோவென்றழுகாரோ
எத்திசையும மண்ணும விண்ணு
மெங்கும் புலம்பாதோ

கஉ௭. தலைச்சன் குமாரனுக்காய்த்
தாய் (கதறும்போலே) கதறி நிற்பது போல்
மலைத்த பெருமூச்செறிநது
மாதுயரங் கொள்ளாரோ.

கஉ௮. தேசம புலம்பாதோ
தீவுகளுங் கத்தாதோ
ஓசை முழங்க வெங்கு
மொப்பாரி சொல்லாரோ.

௧௨௯. பத்தினி மாரெல்லாம
பரதபித்து நிற்காரோ
உத்தமிக ளெலலா
முருகிப் புலம்பாரோ.

௧௩0. காவலன் வேறாய்த் தனித்துக
காதலி வேறாய்த் தனித்துக்
கூவி முழங்குங்
குரலோசை கேட்பதென்ன

௧௩௧. மூவரிலே யோர்தன்
முடியான் முடிந்ததுவோ
பாவலனெல்லைப் பதியான்
பாட்டன் மடிந்ததுவோ

௧௩௨. சீலோவின் பெண்கள்
திருநாளின் கொண்டாட்டோ
சாலேமின் பெண்கள்
தவசினுட் கொண்டாட்டோ.

## ௧0. உத்தம மனஸ்தாபம்.

௧௩௩. அன்பே யென்னுதா
அருமைக் கிறிஸ்தரசே
வன்பாய் நீர்சாகவந்த
வல்வினை யே தாண்டவனே.

௧௩௪. ஆராய்த லில்லாத
ஆழக்கிருபா நதியே
பேரா யுமக்குப்
பெருந்துயரஞ் சூழ்ந்ததென்ன.

௧௩௫. பாவமறியாப்
பரிசுத்த கத்தாவே
தேவரீர்க் கென்னுலித
ஈங்கு வந்து நேர்ந்ததுவோ.

கஙகரு. தின்றுக்கனி பறித்தேன்
செங்கரத்தி லாணிதைத்தே
னென்றுக் கனிபறித்தே
னுச்சிதனி லாணிதைத்தேன்.

கஙஎ. தீயக்கனி பறித்தேன்
சீர்பாதத் தாணிதைத்தேன்
மாயக்கனி பறித்தேன்
வன் கொலைக் குள்ளாக்கி வைத்தேன்.

கஙஅ. நன்றி மறந்தே
னலமிழந்தே னுதனரு
ளொன்று முணரா
துயர் நிலையை விட்டேனே.

கஙகூ. நின்ற நிலைமை கெட்டே
னீதிவழியைக் கடந்தே
னென்றைக்கும் வாழ்ந்திருக்கு
மேதனிலக் காணி விட்டேன்.

கசய. நாலுவர மிழந்தே
னன்மையெல்லாம் போக்கடித்தேன்
சீலமிகுஞ் சிங்காரச்
செல்வ வனமிழந்தேன்.

கசக. சீவனிழந்தேன்
றிடனிழந்தேன் பொல்லாத
பாவி நரக
பயங்கரத்துக் குள்ளானேன்.

கசஉ. ஏதன் மலையு
மீரிரண்டு மாநதியும
நாதனுறவும்
நடுத்தோட்ட வாழ்வு மற்றேன்.

கசரு. சாகா நிலைமையற்றேன்
சாதி வலமையற்றேன்
வாகான தேவ
மகிமையற்றேன் சாயலற்றேன்.

கசச. செய்யமலர்க் காவை விட்டேன்.
சீவவிருக்ஷத்தை விட்டேன்.
ஐயனருளை விட்டே
னபயாறுனைதை விடேன்.

கசரு. தோட்டச் சுதந்தரமுஞ
சுத்தமனச்சாட்சியும் போய்க்
காட்டுமனுதியு மாய்க்
கன்மனதியு மானேன்.

கசசு தின்ற கனியாலே
தீபாவி யானதல்லா
லன்றுமுதற் றேவகோ
பாக்கினைக்கு முளளானேன்.

கசஎ. கட்டளை மீறினதாற்
கானகததிலே துரத்தப்
பட்டவதிப் பட்டுப்
பரதபித்து நின்றேனே.

கசஅ. ஈசனைப்போலாகி
யிருக்க நினைநததற்கு
நீசனைப் போலாகி
நிந்தைகளுக் குள்ளானேன்.

கசகூ. நெற்றிவெயர்வை விழ
நித்தியமும பாடுபட்டுப்
பற்றுந்துயரம்
பலகவலைக்குள்ளானேன்.

க௫௦. எண்ணத்தினாலே
யெதிராளியாய்ப் போனேன்
மண்ணுக்கு மண்ணாய்
மகா பாவியானேனே;

க௫க. பாவத்துக் காளாய்ப்
பசாசுக்கடிமை யுமாய்ச்
சாபத்துக் காளாகிச்
சத்துருவுமானேனே.

க௫௨. கோமானை மாலையிட்டுக
கொண்டானை வானுலகச்
சீமானை விட்டகன்ற
சீர்கேடி யானேனே

க௫௩. கத்தனைய யன்பாகக்
கைப்பிடித்த மெஞ்ஞானப்
பத்தாவைக் கொன்ற
படுநீலி யானேனே.

க௫௪. அன்பிற்குரியானை
யாற்றும சினேகிதனை
யென பிராணநாயகனை
யெண்ணாமற் போனேனே.

க௫௫. பாவலனைத் தாவீது
பாத்திபனைப் பட்சமுள்ள
காவலனைக் கொன்ற
கனபாவி யானேனே.

க௫௬. நன்மார்க்கத் தூடழைத்த
நாயகனை விட்டகன்று
சன்மார்க்க மற்றுத
தனிமார்க்க மானேனே

கருஎ. நற்குணமும் நற்பணிவும்
நற்புகழு மில்லாமற்
றுற்குணமே மேலான
துற்சீலி யானேனே.

கருஅ. நிதக்கிருபை செய்தானை
(நெஞ்சகத்தெண்ணும) நெஞ்சகத்தே யெண்ணும
லதக்கிரமங் கொண்டமுழு
வாங்சாரி யானேனே

கருகூ. பற்றுந் தாபரமெல்லாம்
பாழ்க்கடித்த வாளூட்டுக்
கொற்றவனைக் கொன்ற
கொடு சூரியானேனே.

௧௬0. கற்பனையால் வந்த
கடாட்சக் கணவனுக்குச்
சற்பனையே செய்த
சதிகாரி யானேனே.

## கக. விண்ணப்பம்.

கசுக ஆண்ட பரப்பொருளே
அக்கிரமத்தைப் பொறுத்து
நீண்ட தயவாயுமக்கு
நேமித்துக் கொள்வீரோ.

கசுஉ. தந்தை மகனைத்
தடுத்தாண்டு கொண்டதுபோ
லெந்தனையும் நோக்கி
யிரட்சித்துக் கொள்வீரோ.

கசுங. பாவிகளை மீட்கவந்த
பக்ஷமே மெய்யான
சீவனே யென் வினையுந்
தீர்த்துவிட வொண்ணாதோ

கசுச. துன்பேத மெலலாந்
தொலைத்தெனை யாசீர்வதித்தா
னின்பாதத்தன்பு வைத்து
நித்தியமும் போற்றேனே.

கசுரு. ஆபத்தனைத்து
மகற்றியெனை யாதரித்தால்
மாபததியானுன்
மலர்ப்பதத்தைப் போற்றேனே.

கசுசு. பாருந் திருக்கண்ணாற்
பார்த்தெனது பாவமெலலாந
திருமனுக்கிரகஞ்
செய்யு மேசையாவே.

கசுஎ. கைதூக்கிப் பாவியெனைக்
காத்திரட்சித் தாண்டருளுந
துய்யாவுமக்கனந்த
தோத்திர சங்கீர்த்தனமே.

கசுஅ. தஞ்சை முதலான
சகல திருச்சபையும்
எஞ்சலிலா தேசுவுக்கு
ளெந்நா நும் வாழியதே.

## கஉ பிரலாப ஒப்பாரி.

அளவு.

கசுகூ. தேவசகாயன் சேயன்
செய்ய திருநெல்வேலி
நாவலருஞ் சொலவேத
நாயகன் பாடலிதே.

கஎO. முன்னவனு ராயிரத்தெண்
ணூற்றாறுப் பானலாண்டிற்

சொன்ன பிரலாபத்
துயரமிகு மொப்பாரி.

கஎக. ஓதும் பிரலாப
வொப்பாரி யாண்டகைமே
லாதனமாய்ச் சொன்ன கண்ணி
நூற்றெழுபத் தொன்றுமே.




கவனிப்பு. இஃது ஒப்பாரி ஒழுங்காய்ப் பாடப்பட்டது. காதலாய்ப் பாடவிரும்பினோருக்கு நிரையசைகளான ககூ-பாட்டிற்றனை தட்டும். அவைகளை இருபிறைக்குள் எழுதியிருக்கிறபடி பாடிக்கொள்க.



கிறிஸ்து எல்லாரிலும் எலலாமாயிருக்கிற

திருஷ்டாந்தம்.

---

கொலோ 3. 11.

# பிரலாப ஒப்பாரி.

## எ. சிலுவை நடை.

௯௫—௯௯ மட்டும்.

பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரரென்ற நான்கு சாதி யையுங் கிறிஸ்துவுக்கு உவமானமாகக் காட்டியது

௯௫ கள்ளன் விடுதலையாய்க்
காராள வங்கிஷத்து
வெள்ளன் கொலையாக
வேதன் விதிவசமோ. எ-து.

இந்நூற் சொன்னேன் வெள்ளாளனென்ற காராள வங்கிஷமானதால் தன் சாதியைக் கிறிஸ்துவுக்கு முன்னர் ஸ்தாபித்தான்.

வெள்ளன், கவடற்றவன், சுத்தன்; கள்ளன், கவடனென்றதுபோல ஆளன், ஆளுகிறவன். இப்பதவுரையின்படி வெள்ளாளன் பரிசுத்தமாய் ஆளுகிறவன் இவன் காராள வங்கிஷமென்றழைக்கப்படுகிறான்.

காராளன்-கார்=மேகம், ஆளன்=ஆளுகிறவன் மேகத்தை ஆளுகிறவன். இவ்வாறே கிறிஸ்துவுங் காராளனாகிய வெள்ளாளனென்று காட்டிற்று.

க காராளன் மேகத்தை ஆளுகிறவன்.

உ—ம்

மேகத்தூணிலிருந்தார. 2 மோ. 14: 19, 24.
மேகத்தின் நடுவிலிருந்தார். 2 மோ. 24: 16.
மேகத்தில் எறிப்போனார். அப். 1: 1.
மேகத்தின்மேல் வருவார் மத் 26: 64.

உ. காராள வங்கிஷம். பிதா எப்படியோ அப்படிக் குமாரன். குமாரன் எப்படியோ அப்படிப் பிதா. 2 மோசே 40: 34. மத. 17: 5

ங. வெள்ளை. வெள்ளாளன; கிறிஸ்து வெள்ளனென்கிறதற்கத்தாட்சியாக ஏரோதே அவருக்கு வெள்ளை வஸதிரந்தரிப்பித்தான் லூக். 23 11 வெள்ளன்-பரிசுத்தன். எசா, 6: 3. 4. 8.

அப்பால் பிரம, க்ஷத்திரிய வைசிய, சூத்திரரென்ற சாதி வகுப்பின்படி போவோம்,

## க. பிரம.

க. மூப்பான் றலைவன்
முதன்மையா னெம்மை யன்பாய்ப்
பார்ப்பான் மடிய
பரமன் விதிவசமோ. எ-து.

பிரம-பிராமணன் அல்லது பார்ப்பான். இதின் மூந்தின ஆர்த்தம்.

க. பிரமன் வேதமுடையவனென்றதுபோல் கிறிஸ்து வுடி வேதன்; வேதநாதன், வேதநாயக னென்றழைக்கப்படுகிறார். உ—ம்.

வேதங்கொடுத்தவர். 2 மோ. 20. அதி.
சுவிசேஷங் கொடுத்தவர், போதி வித்தவர். மத், 4: 17. மாற். 16: 15; 16.

உ. பாப்பான் மூப்பும், குருவும், ஆசாரியனுமாயிரு. கிறதுபோல கிறிஸ்துவுமிருக்கிறார் மத். 23: 10. யோவாக் 13. 13, 14. எபி 7 17.

பிரம-பாப்பான் அல்லது பார்ப்பான். இதினிரண்டாம் அர்த்தம்

ச. பாப்பான்-பார்க்கிறவன். உ—ம் இஸ்ரவேலை அல்லது நம்மை இரத்தத்திற் கிடந்ததையும அப்பால் திருவாணமும் அம்மணமுமாயிருந்ததையும் பார்த்தவன. எசே. 16: 6—8

மெதலகேக் குறவஞ்சி.

பார்க்க தந்தாலேயென்ற தரு 1, 5, 6, 8, 10 பாட்டுக் காண்க.

## உ. க்ஷத்திரியன்.

சூஎ சத்திகரிப்போன
சயாதிபதி சாலேமின்
சத்திரியன் றூவீது
சாகத தீர்ப்பானேனே. எ-து.

க்ஷத்திரியன்-அரசன், வாளுடையவன, சத்திகரிக்கிறவன், அறுக்கிறவன.

கிறிஸ்து சாலேமின் ராசாவாகிய தாவீதுச் சத்திரியனாயிருக்கிறார். இவர சத்திகரிக்கிறார். அவருக்கு வாள் அல்லது பட்டையமுண்டு அபி. 1: 16. அவர் சாதிகளை வெட்டிச் சடிகரிக்கிறார. வெளி 19. 15 அவர சாதிகளை இருப்புக்கோலால் ஆளுகிறார. சங் 2. 9 அவருக்கு வில்லுமுண்டு. வெளி 6. 2.

## ந. வைசியன்.

சூஅ. உசிதத கபவா

இலிங்க வசயாக்குப

வசியர் குலப்பெருமான்

வன்கொலைக் குளானுனே. எ-று.

வைசியனே வெள்ளாளன். இவன் பூவைசியன், தன வைசியன், கோவைசியனென்ற மூன்று வகுப்பானவன்.

க. பூவைசியன், பூமியை உழுது பயிரிட்டு வசியப் படுத்துகின்றவன் அல்லது வளப்படுத்துகிறவன்.

கிறிஸ்து பூவைசியனுயிருக்கிறார். மத் 13: 3-8 எசா. 5: 1-4. எசா. 27: 2, 3. மத் 21. 33. மத். 20: 1-6.

உ. தனவைசியன்-செட்டி, வியாபாரம் பண்ணுகிற வன். தனத்தைக் காத்து வளப்படுத்துகிறவன்

கிறிஸ்து தனவைசியனுயிருக்கிறார். மத் 25: 15-30. லூக். 19: 12-26. லூக். 7 41-43 மத் 18: 24-27. வெளி 3: 18.

செட்டியாருக்குத் தராசிருக்கிறதுபோல கிறிஸ்துவுக் குந் தராசிருக்கிறது. தானி. 5: 27.

ங. கோவைசியன் ஆயன், இடையன், மேய்ப்பன், பசுக்காத்து வளப்படுத்துகிறவன் அல்லது மந்தை மேய்க் கிறவன். ஆட்டுமந்தை மேய்க்கிறவனுக்கு அதிகச்சிறப்பு இடைக்காட்டார் பாடலைக்காண்க.

கிறிஸ்து மேய்ப்பனுயிருக்கிறார் எசா 40: 11. சங் 23: 1. எசே. 34: 23. யோவா. 10: 11.

## ச. சூத்திரன்.

சுசு. சாத்திர புராண

சமஸ்த வேதாக்ஷரத்தின்

சூத்திரன் சாகத்

துணிந்துயனங் கொண்டானே. எ-று.

சூத்திரன் பலவிதச் சூத்திரங்களையுந் தொழில்களையு முடையவன். பலவிதச் சாதி வகுப்பானவன்.

கிறிஸ்து சூத்திரனும் பலவிதத் தொழிலாளியுமாயிருக்கிறார்.

சூத்திரரென்ற தொழிலாளிகளில் முந்தினவன் தச்சன் மத். 13: 55

ஞானத் தச்சனுடகத்தில் வீடுகட்டினேனென்ற தருவைக்காண்க.

உ. கொல்லன். எசா 54: 16. கொல்லனுக்குச் சம்மட்டியுண்டு. எரே 23: 29.

ங. தட்டான். மல்கி. 3: 3:

ச. கன்னான். எசா. 1: 25.

ரு. கற்றச்சன் 2 மோ. 32: 16.

ஞானத்தச்சனுடகத்தில் கற்பலகை செய்தேனையா வென்ற தருவைக் காண்க. ஈங்குபஞ்சாளத்தாரைவர் வகுப்பும் ஒருமிக்க வந்தது கண்டுகொள்க.

அப்பால் பலவிதச் சாதிகள் வகுப்பின்படி,

க. வீடுகட்டுகிற கொல்லத்துக்காரன் அல்லது கொத்தன். எசா. 54: 11, 11. யோவா 14: 2, 3.

உ குயவன். எசா 94· 8 எரே 18: 2—6.

ங. குருவிக்காரன். மற்றது 1 மோ. 2: 19, 20.

ச. வண்ணான் மல்கி 3: 2. எசா. 1: 18.

உதாரணம் முன்னோர் பாடல்.

நல்லருணை நாதர் நமைவருத்த னெஞ்சமே
கொல்லவல்லப் பொலலாக் குணம்போக்கமெல்ல
மழுக்குவான் கூறைதனை மாறுபடவண்ணா
னழுக்கு வாங்கற்கென்றறி.

ரு. சவரகன். எசா. 7: 20.

சு. வைத்தியன் 2 மோ. 15: 26.

எ செம்மான். 1 மோ. 3: 21.

அ. நிசவுகாரன். 2 மோ. 25: 40. 26: 30. எபி 8: 5.

கூ. சவளிக்காரன். சீலை விற்கிறவன். வெளி. 3: 18.

கய சுயம்பாகி. யோவா. 21: 9 சுயம்பாகிக்கு அடுப் புண்டு எசா 31: 9.

கக. பந்திவிசாரிப்புக்காரன். லூக். 12: 37

கஉ. திராட்சப்பழ ரசமும் பாலும் விற்கிறவன். எசா. 55: 1.

கரு. தண்ணீர்ப் பந்தல்க்காரன். வெளி 22. 17.

கச. கள்ளன் வெளி. 3: 3.

கரு செப்படி வித்தைக்காரன்.

அவன் தொழிலாவது.

க பாமபாட்டுகிறது. 2. மோ. 4: 2—4. 2 மோ. 7: 9—12. 4 மோ. 31· 6—9.

வெண்கலச் சற்பம். 20-பாட்டுமுதல் 21-மட்டுங் காண்க

உ. சலஸ்தம்பனம் அலைகளின் மேனடக்கிறது. யோபு 9: 8. மத். 14· 25.

ந கண்கட்டி வித்தை லூக். 4: 29, 31 லூக். 24· 31.

ச. விநோதம் கதவடைத்திருக்கையிலுள்ளாக நடுவே வந்து நிற்கிறது. யோவா 20. 19—26.

கசு வாத்தியக்காரன். யோபு 38· 7—31. 35: 10.

கஎ. துடைப்பதாற் பெருக்குகிறவர். எசா. 14·22,23.

கஅ உடைக்கிறவர். எசா. 30· 14.

சகூ அறுக்கிறவன, பள்ளன். வெளி 14· 15.

உய வெட்டியான், வழியன் யோவா. 14: 6.

அவனுக்குத் தூற்றுக்கூடையுண்டு, மத 3: 12

அவன் வீட்டிலே கன்றுக்குட்டி அடிக்கிற வழக்கம். லூக் 15: 23

அவன் ஜெமழில் சவஅடக்கம்பண்ணுகிறது 5 மோ. 34: 5, 6

உக. ஐரோப்பிய ரெல்லாம் வெள்ளை மனுஷரென்று பெயர். கிறிஸ்துவும வெள்ளையுஞ் சிவப்புமாயிருக்கிறார். உன். 5: 10.

உஉ. ஈத்தியரெல்லாங் கறுத்த மனுஷரென்றழைக்கப் படுகிறார்கள். கிறிஸ்துவும் பாடுபட்டதினாலே கன்னிக் கறுத்துப்போனார். உன். 5: 14.

உரு. காப்பிரிகளுக்கு இசசிக்கத்தக்க ரூபமில்லை. அவ் வாறே கிறிஸ்துவுமானார். எசா. 53: 2.

மற்றும் இப்படிக் காணக.

இதினாலே கிறிஸ்து எல்லாச சாதிகளுக்கும் பொது வாய் மனுடவதாரம்பண்ணி எல்லாருக்கும் எல்லாமானா ரென்பது சத்தியந்தானே.



